27th September 1958]

SRI K. RAMACHANDRAN : வருஷா வருஷம் இத்தனை ஸ்டட் புல்கள் சப்ளை செய்யவேண்டுமென்று டார்ஜட் இருக்கிறதா ? அதன்படி கோவப்பரேடிவ் சொசைட்டிகளுக்கு மட்டும்தான் கொடுக்கப்படுகிறதா ? அல்லது தனிப்பட்டவர்களுக்கும் கொடுக்கப்படுகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தனிப்பட்டவர்களுக்கும் இது கொடுக்கப்பட்டு வருகிறது. கோவாப்பரேடிவ் சொசைட்டிக்கு என்று ஒன்றும் டார்ஜட் இல்லை.

*Khadi Sales Depots*

* 583 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

இந்த மாகாணத்தில் எந்தெந்த இடங்களில் அரசாங்கக் கதர் விற்பனை ஸ்தாபனங்கள் இருக்கின்றன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : A list[a] of places where Government Khadi Sales Depots are functioning and another list of production centres where Khadi is also sold to the public are placed on the table of the House.

SRI A. VEDARATHNAM : இப்பொழுது ஆரம்பித்திருக்கும் சென்டர்கள் எல்லாம் லாபகரமாக நடந்து வருகின்றனவா ? இல்லை யானால், அவைகள் லாபகரமாக நடக்கும்படிச் செய்வதற்கு என்ன முயற்சி எடுத்துக்கொள்வார்கள் ? இந்த சென்டர்களை விஸ்தரிப்பதற்கு அரசாங்கத்திற்கு உத்தேசம் உண்டா ? அரசாங்கத் திட்டத்திலே வைத் திருக்கும் லிஸ்டிலிருந்து, டிசைன்கள் தயாரிப்பதற்காக ஒரு சென்டர்தான் ஏற்படுத்தப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. காதியில் நல்ல டிசைன்கள் இல்லை என்று குறைகள் கூறப்படும் காரணத்தால், டிசைன்களை இன்னும் அபிவிருத்தி செய்வதற்கான முயற்சிகள் ஏதேனும் எடுத்துக்கொள்ளுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதிலே லாபகரமாக நடக்கக்கூடியது ஒன்றும் இல்லை. நஷ்டம் இல்லை என்றும் சொல் லலாம். காதி உற்பத்தி நிலையங்களை விஸ்தரிக்க வேண்டும் என்பதுதான் நோக்கம். அப்படி விஸ்தரிக்கப்பட்டு வருகிறது. டிசைன்கள் தயாரிக்கும் சென்டர்களையும் இன்னும் அதிகப்படுத்தவேண்டும் என்பதும் யோசனை யில் இருக்கிறது.

*Supply of Service stamps to Legislators*

* 584 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Finance be pleased to state whether there is any proposal to supply Government Service stamps for the use of the Legislators?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

SRI S. LAZAR : உலகத்திலேயுள்ள அநேக பார்லிமெண்டு களிலே இந்த வழக்கம் இருந்து வருகிறதாகவும், அதைப் பரிசீலனை செய்யு மாறும் சர்க்காருக்கு அங்கத்தினர்களிடமிருந்து ஏற்கனவே கோரிக்கை வந்துள்ளதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதை விசாரித்துப் பார்த்ததில், இந்தியாவிலேயே பம்பாயில் மட்டும்தான் ஸ்டாம்புகளுக்காக மாதத்திற்கு ஐந்து ரூபாய் வீதம் கொடுக்கப்படுகிறது. இதைப் பற்றி இங்கு கவனிக்க வேண்டிய அவசியம் இல்லை என்று தோன்றுகிறது.

---

[a] Printed as Appendix VIII on pages 887–888 infra.